REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 5563

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

மலர் 3] சென்னை: ஆனி 7உ செவ்வாய் (21—6—55) ★ ★ வெளியூர்: ஆனி 8உ புதன் (22—6—55) [இதழ் 6

### சீன அதிகாரிகளுக்கு புது சம்பள முறை?

சீன அரசாங்கத்தின்கீழ் பணி புரியும் சர்க்கார் ஊழியர்களுக்கு இனி சம்பளம் ரொக்கப் பணமாகத் தரப்படாமல் உணவுப் பொருள்கள், உடை, வீட்டு வசதி, இதர வாழ்க்கைத் தேவைகள் ஆகியவைகளாக ஜூலை மாதம் முதல் தருவதென சீன மந்திரி சபை முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

பணமாக சம்பளம் தருவதற்குப் பதிலாக உண்மையான சம்பளம் தரும் முறையை விரிவுபடுத்துவதற்காகவே இத்திட்டமாம்.

இம்முறையினால் கஷ்டப்படக்கூடிய ஊழியர்களுக்கு பாதுகாப்பு நல நிதியிலிருந்து சிறிது ரொக்கமும் தரப்படுமென்று தெரிகிறது.

# ரூபாய் 400 கோடி செலவில் காகிதத் திட்டம்!

## முதல் திட்டத்திற்கு ரூ. 80 கோடிதானே ஒதுக்கப்பட்டது?

## திட்டத்தை நிறைவேற்ற இந்தியப் பேரரசு உதவி புரியுமா?

### சென்னை அதிகாரிகளின் எண்ணம் ஆகாயக்கோட்டைதானு?

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்ப்பதற்கென சென்னை அரசாங்கப் பல்வேறு அலுவல் துறை ஆணையாளர்களும் தனித்தனியே தீட்டிவரும் திட்டங்களை நோக்கும்பொழுது, அவர்கள் அனைவரும் ஆகாயக் கோட்டை அமைத்து வருகின்றனரோ என்றே கருத வேண்டியதாக இருக்கிறது.

மாநிலத் திட்டம் எத்தகைய உருவில் அமையக்கூடும் என்பதற்கான அறிகுறி கிடைக்கப்பெறாத நிலையிலும், தங்கள் ஆணைக்குட்பட்ட அலுவல் துறைகளுக்கெனத் தீட்டப்படும் திட்டங்களுக்கு எவ்வளவு பணம் ஒதுக்கப்படுமென்பது உணர்த்தப்படாத நிலையிலும் தாங்கள் செயலாற்றுவதாக சில ஆணையாளர்கள் ஒப்புக்கொண்டனர்.

—இத்தகவலை, சென்னை 'மெயில்' இதழின் நிருவன நிருபர் தந்துள்ளார்.

அண்மையில் இரு நாட்களாக சென்னை அரசாங்க ஆணையாளர்களிடை கலந்து பேசிய திட்டக் குழுவின் துணைத் தலைவரான வி. டி. கிருஷ்ணமாச்சாரியார், நிலைமையைத் தெளிவுப்படுத்தாததுடன், அவர்களுக்கு இருந்துவந்த ஐயப்பாட்டை மேலும் உறுதி செய்யும் வகையிலும் விளக்கம் தந்துள்ளார்.

பணம் ஒதுக்கல் என்ற நிலையிலிருந்து இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின் சாதாரண உருவத்தைக்கூட நிர்ணயித்து அவர் கூறவில்லை என்றும், அது பற்றிய திட்ட வட்டமான கருத்தையும் தெரிவிக்கவில்லை என்றும் விளக்கமாக அறிவிக்கப்படுகிறது.

யூனியன் நிதி அமைச்சர்தான், ஆணையாளர்கள் தீட்ட வேண்டிய திட்டங்களுக்கு, அடிப்படை அமைத்துத் தர முடியும் எனக் கூறினதாகவும் தெரிய வருகிறது.

இந்நிலையில் அரசாங்க அலுவல் துறை ஒவ்வொன்றும், ஒன்றோடொன்று போட்டியிட்டுக் கொண்டு, இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்ப்பதற்கென மிகையான செயல் முறை ஏற்பாடுகளை உருவாக்கியுள்ளன.

ரூ. 400 கோடி செலவில் நிறைவேற்றப்பட வேண்டிய திட்டங்களும், ஏற்பாடுகளும் சென்னை அரசாங்க அபிவிருத்தி ஆணையாளரிடம் குவிந்துபோய் இருக்கின்றன.

எடுத்துக்காட்டுக்காக ஒன்றைக் காட்டுவோம் :—

கல்வி வளர்ச்சிக்குமட்டுமென, கல்வித் துறை, ஏறத்தாழ ரூ. 85 கோடி செலவில் திட்டம் தீட்டியிருப்பதாகச்சொல்லப்படுகிறது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னையின் பங்காக ரூ. 80 கோடி மட்டுமேதான் ஒதுக்கப்பட்டிருந்தது,' என்ற உண்மை உணரப்படுமானால், இப்பொழுதுள்ள நிலைமையின் பொருந்தாத்தன்மை முழுதும் விளக்கமாகத் தெரிந்துவிடும்.

போடப்பட்டுள்ள முழு ஏற்பாடுகளும் முடிவில் வெகுவாகச் சிதைக்கப்பட்டுவிடுமானால், முதலிடம் தரவேண்டுமென ஒதுக்கப் பட்டுள்ளவைகளும், மற்ற திட்டங்களும் சீர்குலைய நேருவதுடன், பெருங் குழப்பத்திற்கும் இடமேற்பட்டுவிடும் என அதிகாரிகள் அச்சம் தெரிவித்திருக்கின்றனர்.

ரூ. 300 அல்லது ரூ. 400 கோடி, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னையின் பங்காக இருக்கக் கூடுமெனத் தீர்மானித்து, அந்த அடிப்படையில் செயலாற்ற முற்படுவது நற்பயன் விளைவிக்காது என்ற உண்மையை அதிகாரிகள் உணர்ந்து வருகின்றனர் என்பதற்கான அறிகுறிகள்தென்படுகின்றன.

எவ்வளவுதான் தாராளமாக மதிப்பிட்டுக் கொள்வதானாலும், முதல் திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருந்ததைக் காட்டிலும் இரண்டு மடங்கு—அதாவது, ரூ 150 அல்லது ரூ. 160 கோடிக்குமேல் இரண்டாவது திட்டத்தின் மதிப்புத் தொகை இருக்கவே இருக்

(4-ம் பக்கம் பார்க்க)

## 'அகில உலக காரியங்களை கவனிக்க ஆங்கிலம் அவசியம் வேண்டும்'

### சென்னை கவர்னர் பிரகாசா கருத்து

### இந்தியைத் திணிக்கவும் பழைய ஏமாற்று வித்தையைக் கூறுகிறார்

உதகை, ஜூன் 19—

"தேசிய மொழிப் பிரச்சினைக்கு இறுதியாக முடிவு காணப்படும்வரை, இந்தியர்கள் எல்லோரும் ஆங்கில மொழியை வைத்துக்கொள்வது மட்டுமின்றி, பல மாநில, அகில உலக காரியங்களுக்காக அதனை உபயோகப்படுத்துவதை ஊக்குவிக்கவும் வேண்டும்,"

—என்று; சென்னை கவர்னர் பிரகாசா கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

"ஆங்கிலம் உலகத்தின் ஆற்றல் மிகுந்த, அழகு மொழிகளுள் ஒன்றாகும்; சுதந்திரத்திற்கு முன்பு மக்கள், தங்கள் தாய் மொழிகளைக்கூடப் புறக்கணித்துவிட்டு ஆங்கிலம் பயின்றனர்; ஆனால், இப்போது ஆங்கிலம் அலட்சியப்படுத்தப்பட்டு — பின் தள்ளப்பட்டுவிட்டது; இரண்டாம் மொழியாக அது ஆக்கப்பட்டுவிட்டது; இந்த நிலைக்காக வருந்துபவர்களில் நானும் ஒருவன்; அதுமட்டுமன்றி, மீண்டும் ஆங்கிலம் மக்களின் இதயத்தில் இடம் பெறவேண்டும் என்றும் விரும்புபவன்—நான்," என்றார்.

மேலும் அவர் கூறியதாவது :—

"இப்போது நாட்டில் தேசிய மொழிப் பிரச்சினை தோன்றியுள்

(4-ம் பக்கம் பார்க்க)

## 'சாதாரண குடிமக்கள் மீதுதானே வரி போட முடிகிறது'

### 'ஆலை அரசர்களிடம் வரிவசூலிப்பது அங்கல்லவோ இருக்கிறது'

### ஆந்திர முதலமைச்சரின் முகாரி!

"தங்கள் வருமானத்தைப் பெருக்கிக்கொள்ள மாநில அரசாங்கங்கள் விரும்புமானால், சாதாரண குடிமக்கள் மீதுதானே அவைகள் வரி போட வேண்டியதாக இருக்கின்றன? ஆலை அரசர்களிடமும், முதலாளிகளிடமும் வரி விதிக்கும் உரிமை மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டதாகவல்லவோ இருக்கிறது!"

—இந்த உண்மை நிலையை, ஆந்திர முதலமைச்சர் கோபால (ரெட்டியார்) நெல்லூர் அருகில் உயர்நிலைப்பள்ளி ஒன்றைத் திறந்துவைத்த பொழுது கூறியுள்ளார்.

மக்கள் அதிக வசதிகளைக் கோரினால், அவர்கள் அதிக வரி கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும் என்றும், ஆசிரியர்களின் வாழ்க்கைச் சங்கடங்களை அரசாங்கம் தெரிந்திருந்த போதிலும், அவைகளைப் போக்கும் வகையில் நடவடிக்கை எடுக்க முடியாத நிலையில் அரசாங்கத்தின் நிதி நிலை இருந்து வருவதாகவும், அவர் தனது பேச்சில் குறிப்பிட்டார்.

சென்னையில் கொடுத்துள்ளது போல் ஆசிரியர்களுக்கு ஓய்வு காலச் சம்பளம் கொடுக்கமுடியாது என்றும், அப்படி கொடுப்பதானால் ஆந்திராவின் வரவு - செலவு திட்டத்தில் மேலும் துண்டு விழும் என்றும், ஏழாவது படிவம் வரையில் படிக்கும் மாணவர்களுக்குச் சம்பளமின்றி கல்வி போதிப்பது என்பதில் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது என்றும், நிதி நிலை இடமளிக்கும் பொழுது அதற்காவன செய்யப்படும் என்றும் அவர் மேலும் பேசும்பொழுது அறிவித்தார்.

#### உள்ளூர் நிர்வாக உறுப்பினர் பதவி

நகரசபை, மாவட்டக் கழகம் போன்ற உள்ளூர் நிர்வாக நிறுவனங்களில் உறுப்பினராகப் பதவி வகிப்பது கண்டிப்பாக கௌரவ வேலையாகவே கருதப்படவேண்டும் என்றும், தினப் படி எதுவும் கொடுக்கப்படக் கூடாதெனவும் இந்தியப் பேரரசு திட்டமான கருத்துக் கொண்டிருக்கிறதாகத் தெரியவருகிறது.

## குடந்தையில் பொதுசெயலாளருக்கு மாபெரும் வரவேற்பு

### மாநாட்டு நிதிக்கு ரூ. 1,001 பண முடிப்பு!

தஞ்சை மாவட்ட தி. மு. கழகச் சார்பில், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்குப் பாராட்டும், மாநில மாநாட்டுக்கு நிதியளிப்பும் 18-6-55 அன்று மிகச் சிறப்புற நடைபெற்றது. குடந்தை நகரே இதுவரை கண்டிராத அளவில் மாபெரும் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

தோழர் கே. கே. நீலமேகம் அவர்கள் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் மாவட்டச் செயலாளர் தோழர் என். எஸ். இளங்கோ அவர்களால் மாநில மாநாட்டு நிதிக்கென ரூ. 1,001 கொண்ட பணமுடிப்பு ஒன்று வழங்கப்பட்டது.

(விவரங்கள் நாளை வெளிவரும்)

## திருச்சியில் பொதுச் செயலாளருக்கு மாபெரும் வரவேற்பு

### மாநாட்டு நிதிக்கு ரூ. 1,600 பண முடிப்பு!

திருச்சி மாவட்ட தி. மு. கழகத்தின் சார்பில் 19—6—55 மாலை 6 மணிக்கு, திருச்சி நகர மண்டப மைதானத்தில் பொதுச் செயலாளர் வரவேற்பும், மாநில மாநாட்டு நிதியளிப்பு விழாவும் நடைபெற்றது. விழாவைக் காண, திருச்சி நகரம் கண்டிராத அளவு மக்கள் கூட்டம் குழுமியிருந்தது.

தோழர் எஸ் ஏ. ஜி. சாமி நாட்டுப்பண் பாட கூட்டம் துவங்கியது.

விழாவிற்கு திருச்சி மாவட்டச் செயலாளர் தோழர் அம்பில் தர்மலிங்கம் தலைமை தாங்கினார்.

தோழர்கள் நில்லை வில்லாளன், கே.ஏ மதியழகன் ஆகியோர் பேசிய பின், பொதுச்செயலாளர் நெடுஞ்

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

# நம் நாடு



தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 21—6—'55 செவ்வாய்


# தேள் கொட்டுகிறது!

[II]

முற்காலத்தில் 'தீவிர கடவுள் பக்தி' மக்கள் அனைவரிடத்திலும் அல்லது பெரும்பான்மையினரிடத்தில் இருந்து வந்ததாகவும், இப்பொழுது அது குறைந்து போய் இருப்பதாகவும், ஆச்சாரியார் மட்டுமல்ல—அவர் போன்ற அறியாமை வியாபாரிகள் அனைவருமே கூறித் திரிகின்றனர்.

'தீவிர கடவுள் பக்தி' மக்களைப் பிடித்தாட்டிக் கொண்டிருந்த நேரத்தில்தான், வருணாச்சிரம வம்பும், பிறப்பினால் உயர்வு-தாழ்வு புகுத்திய கொடுந்தன்மையும் உருவெடுத்திருக்கிறது என்பதை, தனது வாதத் திறமை முழுவதையும் காட்டி வாதிடக் கிளம்பினாலும், ஆச்சாரியாரால் மறுத்துவிட முடியாது—உண்மை வரலாற்றை மறைத்துவிட முடியாது.

'தீவிரக் கடவுள் பக்தி'க்கு மக்கள் அறிவை அடகு வைத்திருந்த அந்த நாளில்தான், ஆண்டவன் மனித உருவில் மட்டுமல்லாமல், மனிதர்களுக்கு ஏற்பட்ட இடுக்கண்களைக் களைந்தெறிவதோடு மட்டுமே நின்றுவிடாமல், மிருகங்களுக்கு உண்டான உபத்திரவங்களைக் கூட, மிருக உருவில் தோன்றி உதவி புரிந்திருக்கிறார். அச்சூழ்நிலையில்தான், பிறப்பில் உயர்வு தாழ்வு பேசும் பித்தலாட்டம், மனமுவந்து புரிந்த அக்கிரமம், மக்களிடை பலம் பெற்றிருக்கிறது.

தீவிர கடவுள் பக்தி சரியத் தொடங்கியதும், சரிநிகர் சமம் என்ற கோட்பாடு மெள்ள மெள்ள—ஆனால் முழு வன்மையுடன், சிலபலரிடம் கருக்கொள்ளத்தொடங்கியது. காலஞ் செல்லச் செல்ல, கோட்பாட்டிற்கு ஆதிக்கபுரியினரிடமிருந்து மூர்த்தண்யமான எதிர்ப்புக் கிளம்பக் கிளம்ப, சமத்துவக் கருத்து, எவராலும் அழித்துவிட முடியாத அளவில் ஓங்கி வளர்ந்து பேருருவம் பெற்றுவிட்டது. அது வளர்ந்து கொண்டே போகிறது.

அந்த வளர்ச்சி, ஆதிக்கபுரியினர் பலருக்கும் அச்சத்தை மூட்டியுள்ளது போலவே, ஆச்சாரியாருக்கும் குடல் நடுக்கத்தைக் கொடுத்திருக்கிறது. ஆதிக்கபுரியினரின் இறுதி ஆபத்பாந்தவரான ஆச்சாரியார், முடிவில் தோல்வியையே கொடுத்துத்தீரக்கூடிய, கையறுந்த போராட்டத்தில்—அதாவது, சமத்துவ மனப்போக்கை—உரிமை வேட்கையை ஒழித்துக்கட்ட 'தீவிர கடவுள் பக்தி'யை சிபாரிசு செய்கிறார்!

அவருடைய முயற்சி, ஆதிக்க வெறியில் அவருக்குள்ள பற்றுதலையும், அதைக் கட்டிக் காப்பதில் அவருக்குள்ள அற்ப ஆசையையும் அறுதியிட்டுக் காட்ட உதவுகிறது.

பல நூறு ஆண்டுக்காலமாக, தீண்டப்படாதோர் எனக் கூறப்படும் மக்கள், பக்தி செலுத்தத்தான் செய்தனர். ஆரிய வேதம் விதித்த கட்டளையை—கடமையை அவர்கள் மனமகிழ்ச்சியுடன் செய்தே வந்திருக்கிறார்கள். சமீப காலம் வரை அக்குடிப் பிறந்தோர், உரிமைக் குரல் எழுப்பினதே கிடையாது.

ஆதிக்கபுரியினர் உள்ளிட்ட உயர்ஜாதி இந்துக்கள் எனப்படுவோர், இதுவரை, தங்கள் நல்வாழ்விற்காக அவர்கள் செய்த சேவையை—அவர்கள் புரிந்த தியாகத்தைப் பாராட்டி அவர்கள் விடுபட, சமத்துவம் பெற, சுட்டுவிரலும் அசைத்திடவில்லை என்பது அனைவரும் அறிந்துள்ள உண்மையாகும்.

"அப்பழங்குடி மக்களைத் தாழ்த்திவைத்திருந்ததுபோதும்; அப்பெருங்குடி மக்களை தீண்டப்படாதோர் என இழிமொழியிட்டழைத்து ஒதுக்கி வைத்திருந்தது போதும்; அவர் உழைப்பை உறிஞ்சி கொழுத்தது போதும்; அவர்களை நம்மவர் என ஏற்போம், சமத்துவமாக நடத்துவோம், அவர்களையும் மக்களாக மதிக்கும் மனப்பாங்கு பெறுவோம்" என, சமுதாயத்தின் தலைமை பீடத்தமர்ந்திருக்கும் ஆதிக்கபுரியினரும் மனமாற்றம் பெற்றிடக் காணோம்; மற்ற உயர் ஜாதி இந்துக்கள் எனப்படுவோரும் மனமாசு நீங்கிடக் காணோம்!

அரியைத் தொழுவோரும் சரி, அரனைப் பணிவோரும் சரி, மாரிக்குப் பலியிடுவோரும் சரி, மன்னார்சாமிக்குப் பூஜை போடுவோரும் சரி, அந்தந்த தெய்வங்களை வணங்கும் தீண்டப்படாத மக்களை, ஒத்த குல மக்களாகக் கருதவுமில்லை—கொண்டு பழகவுமில்லை—அந்த அளவு மன மாசு நீங்கினவர்களாகிவிடவுமில்லை!

உழைத்து உழைத்து உருக்குலைந்த கூட்டம், பணிபுரிந்து பணிபுரிந்து எலும்புருவாகக் காட்சி தரும் கூட்டம், தொழுது தொழுது இழிவையும் பழியையும் தாங்கிக் கொண்டு தரைமட்டமாகப் போன கூட்டம், உரிமை எனத் துவக்கத்தில் முணுமுணுத்தது—நாள் போகப் போக கம்பீரமாக அக்குரலை முழங்கத் துவங்கியது.

அதன் விளைவு—ஆலய நுழைவு; அதன் செயல் ஏற்பாடு—அதற்குரிய சட்டம்.

வெள்ளையர் ஆட்சிக் காலத்தில், டெல்லி மத்திய சட்டசபையில், கேரள பார்ப்பனரான சி. எஸ். இரங்கையர், ஆலய நுழைவு மசோதா ஒன்றைக் கொணர்ந்தார். அன்று அதற்கு அநுசரணையாக, காங்கிரஸ் தலைவராக இருந்த ஆச்சாரியார், தமிழ் நாட்டில், ஊர் ஊராகச் சென்று கூட்டங்கள் போட்டு, ஆலய நுழைவுக்கு ஆதரவு தேடினார். அதற்கான கையெழுத்துக்களையும் திரட்டினார்.

அதை வெறும் பகட்டுக்காகத்தான், அரசியலில் தன்னை ஒரு சமரச ஞானியாகக் காட்டிக்கொள்ளத்தான், அன்று அவர் அவ்வாறு செய்தார் என நாம் குறை கூறுவதற்கு இடம் வைக்காமல், தனது பேச்சின் மூலம் ஆச்சாரியாரே இன்று அதன் உண்மையைக் கக்குகிறார்!

நெற்குன்றம் கோயிலில் தனது திருமணத்தை நடத்த வேண்டுமென பி. ஏ. பட்டம் பெற்ற ஒரு அரிசன மாப்பிள்ளை விரும்பினதாகவும், அதை அங்குள்ள உயர் ஜாதிக்காரர்கள் எதிர்த்ததாகவும், போலீஸ் துணையுடன் கோயிலில் திருமணம் செய்யப்பட்டதாகவும், அத் திருமணத்தில் கலந்துகொண்ட சட்டசபைத் தலைவர் சிவஷண்முகம் அவர்கள் சேக்கிழார் தின விழாவில் கூறியுள்ளார்.

அதை ஒரு எடுத்துக்காட்டாகக் கொண்டு ஆச்சாரியார், "சபாநாயகர் கூறிய சம்பவத்திலிருந்து பார்ப்பனர்களை மட்டும் குற்றம் கூறுவதற்கில்லை என்பது புலனாகும்; ஆலய நுழைவை விரும்பாத மற்ற ஜாதிகளும் இருக்கின்றனர் என்று தெரிகிறது," என, பார்ப்பனர் நீங்கலாக மற்ற ஜாதியினர் மீது மாசு கற்பித்து, அதை மிகைப்படுத்திக் காட்டவும் பார்க்கிறார்!

ஆச்சாரியார் வாயுரையிலிருந்தே, ஆலய நுழைவை பார்ப்பனர்களும் எதிர்க்கிறார்கள் என்பது தெரிவாகிறது!

சிற்றூர்களில் கோயில் அர்ச்சகப் பார்ப்பனருக்கும், பஞ்சாங்கப் புரோகித பார்ப்பனருக்கும் இருக்கும் பிடிப்பு, செல்வாக்கு, ஆதிக்கம், ஒருவனுக்குத் தன் உயிரின் மீது இருக்கும் பற்று பாசத்தைவிட அதிகமானதாகும் என்பதை, விஷயமறிந்தோர் அறிந்தே இருக்கிறார்கள்.

சிற்றூர் மக்களை ஆட்டி வைக்கும் ஆற்றல் அரசர்கள், புரோகிதரும்—ஆலய அர்ச்சகரும்!

அவர்கள் செயல், விஷமம் நிரைமறைவில் செயல்படுவது ஆகும்!

ஆச்சாரியார் போன்று, பார்ப்பனத் திருமேனிகளுக்கு இரு நாக்கு உண்டு!

அரிசனங்களுக்கு ஆலய நுழைவு உரிமை உண்டு என்பதை ஒப்பி, வாய்ப்பு கிடைத்தகாலை சட்டமும் இயற்றிவிட்டு, இப்பொழுது அதற்கு நேர் மாற்றமாக எப்படி ஆச்சாரியார் பேசத் துணிவும், நாணயக் குறைவும் பெற்றிருக்கிறாரோ அதே உள்ள உரமும், நாணயமின்மையும் ஆதிக்கபுரியினர் அனைவருக்குமே உண்டு என்பது வரலாற்று உண்மையாகும். அதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இருப்பவர் அன்பர் ஆச்சாரியார்!

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆதிக்கப் புரியனர் செய்த கொடுமை, செய்துவரும் கேடு, தேள் கொட்டுதலுக்குச் சமம். அவரைப்பின்தொடர்ந்து மற்ற ஜாதிக்காரர்கள் வேறு வழியின்றி இயற்றும் இடுக்கண், ஈ, எறும்பு தரும் தொல்லைக்கு ஒப்பாகும்.

எய்தவர் ஆதிக்க புரியினர்! அப்பாகத்தை அம்பாகத் தைத்தவர் மற்ற ஜாதியினர்!

எய்தவனைத்தான் குற்றவாளி கூண்டில் ஏற்றி தண்டிக்க வேண்டும்! அம்பை தண்டிக்க, ஆச்சாரியார் தவிர்த்து, எந்த அறிவிலியும் முன்வரான்!

'தீண்டாமை ஒழிப்புச் சங்கத்தவரே! அரிசன மக்களுக்கு விசேஷ சலுகை கேட்காதீர்! உயர் ஜாதி இந்துக்களின் மனத்தை மாற்றும் பணியிலீடுபடுங்கள்'-இவ்வாறு ஆச்சாரியார் அருள்பாலித்துள்ளார்.

பிறரை மேற்கொள்ளுமாறு கூறியுள்ளதை, ஆச்சாரியார் இதுவரை என்றாவது செய்திருக்கிறாரா எனக் கேட்கிறோம், அவரையல்ல—அவர்தான் முன்னுக்குப் பின் முரண்படப் பேசும் பருவத்தில் இருக்கிறாரே—அறிவு கெடாத பருவத்திலிருக்கும் மற்றவர்களைக் கேட்கிறோம்.

'சனாதனத்தைச் சாகடியுங்கள்; வருணாசிரமத்தை ஆழக் குழிதோண்டிப் புதையுங்கள்; சாதியை விட்டொழியுங்கள்; அவைகளை ஆதரிக்கும் சாஸ்திர ஏடுகளுக்குத் தீயிடுங்கள்; சம்பிரதாயச் சடங்குகளைக் காறி உமிழுங்கள்'--இப்படி காரசாரமாக ஆச்சாரியார் பிரசாரம் செய்ய முன்வர வேண்டாம்; அவருடைய ஜென்மக் கூறு, அதற்கு ஒத்துவராது!

ஆனால், 'சனாதனத்தைக் கைவிடுங்கள்; வருணாச்சிரமத்தை விலக்கி விடுங்கள்; ஜாதியை மறவுங்கள்; சாஸ்திர ஏடுகளை ஒதுக்குங்கள்; சம்பிரதாயச் சடங்குகளை திருத்துங்கள்,'—இப்படி, நயமாக, முழு நேரமும் இல்லையாயினும், வாய்ப்பு நேருங்காலத்திலாவது ஆச்சாரியார் பேசுகிறாரா?

ஆனால், சமத்துவம் கோருபவர்களை, ஜாதி கூடாது என்பவர்களை, அவசியமிருந்தாலும் இல்லாமற்போனாலும், வாய்க்கு வந்தபடி ஏசாமலாவது ஆச்சாரியார் இருக்கிறாரா? இல்லையே!

'தேவை' என அவரே கூறுவதை, அவரே செய்வதும் கிடையாது; செய்கிறவர்களைத் தூற்றாமல் இருப்பதும் கிடையாது.

ஆக, இரண்டு தவறுகளையும் ஆச்சாரியார் செய்து கொண்டு இருக்கிறார்!

ஆதிக்கபுரியினரின் சார்பில் 'புது குத்தகை' எழுத ஆச்சாரியார் அரும் பாடுபடுகிறார்! அவர்களுக்குப் புதிய ஆதிக்கம் தேடுவதில் ஆச்சாரியார் முனைந்திருக்கிறார்!

அதைத்தான் தேள் கொட்டுகிறது! என்கிறோம்.

# சர்க்காரின் போலிகௌரவமே அகாலி கிளர்ச்சி நீடிப்பதற்குக் காரணம்!

## அடக்குமுறை வலுத்தும் கிளர்ச்சி தளர்ச்சியுறவில்லை

அகாலி தளத்தவர் கடந்த ஒரு திங்களுக்கு மேலாக மொழிவழி மாநிலக் கோரிக்கைக்காக குரல் எழுப்பும் உரிமையை நிலைநாட்டிக் கொள்ளும் பொருட்டு நடத்திவரும் கிளர்ச்சி நாளுக்குநாள் சூடு பிடித்துக்கொண்டிருக்கிறது.

கிளர்ச்சியை ஒட்டி இதுவரை கைது செய்யப்பட்டோரின் எண்ணிக்கை 2,500; இதுவன்னியில், தடுப்புக்காவல் சட்டத்தின் கீழ் மாநிலமெங்கணுமுள்ள அகாலிதளத்தவர்கள் பலர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

'நாம் விதித்துள்ள தடையை மீறி இவர்கள் கிளர்ச்சி நடத்துவதா? அந்தக் கிளர்ச்சிக்குப் பணிந்துகொடுத்து தடையை நீக்குவதா?' என்ற பஞ்சாப் சர்க்காரின் போலி கௌரவத்தினாலேயே, கிளர்ச்சியில் ஈடுபட்டோர்கூட எதிர்பாராத அளவுக்குக் கிளர்ச்சி நீண்டுகொண்டே செல்வதாகக் கூறப்படுகிறது.

அகாலிதளத்தவரின் உரிமைக் கிளர்ச்சி அரசாங்கத்தின் கடுமையான அடக்குமுறையாலுங்கூட தளர்ச்சியடையாதது கண்டு காங்கிரஸ்காரர்கள் பீதியடைந்திருக்கின்றனர் என்பதைத்தான் அவர்களது, 'எதிர்க்கிளர்ச்சி செய்யும் முயற்சி பற்றிய அறிவிப்புகள் கூறுகின்றன என்ற தகவல் பரவலாகக் கிடைக்கிறது.

மக்கள் சபை உறுப்பினரும், காங்கிரஸ் சார்புடைய சீக்கிய நிறுவனமான சிரோமணி கால்சா தளத் தலைவருமான ஜத்தேகார் உதாம் சிங் நாகோகர் என்பவர், பெருமான் என்பவர் துவங்கப் போவதாக அறிவித்துள்ள எதிர்ப்புக் கிளர்ச்சியைத் தாம் ஆதரிப்பதாகவும், அத்தகைய ஒரு கிளர்ச்சியில் ஈடுபடுவதற்கு எம். எல். ஏ-க்கள், எம். பி.-க்கள் கொண்ட ஒரு செயற்குழு நிறுவப்போவதாகவும் வெளியிட்டுள்ள அறிக்கையே 'காங்கிரஸ்காரர்கள் கலக்கமுற்றிருக்கின்றனர்' என்பதற்குச் சான்றாகும்.

ரஷ்யா செல்லு முன், பண்டித நேரு, அகாலி தளக் கிளர்ச்சி குறித்து, 'முட்டாள்தனமானது; அற்பத்தனமானது; அருவருக்கத்தக்கது,' என்றெல்லாம் கண்டித்திருந்தும், அந்தக் கண்டனத்தைக் காட்டி, அடக்குமுறையை அதிகரிக்கப் போவதாக பஞ்சாப் முதன் மந்திரி பீம்சேன் சச்சார் அச்சுறுத்தியிருந்தும், அகாலி கிளர்ச்சி நாளுக்கு நாள், வெகு தீவிரமாகிக் கொண்டே வருவது வெளிப்படையாகத் தெரிகிறது. பஞ்சாப், பெப்சு மாநிலங்களில் நெருக்கடி உச்ச நிலைக்கு வெகு வேகமாகச் சென்றுகொண்டிருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

## ஒரேமாதிரியாக நடத்துக!

### முதலமைச்சரிடம் முறையீடு

சேலம் மாவட்ட விசைத் தறியாளர் சங்கம், வர்த்தக சபை ஆகியவற்றின் சார்பில் ஒரு தூதுக் குழு, சென்னை முதலமைச்சர் காமராசரைப் பேட்டி கண்டு, விற்பனை வரி விதிக்கும் விஷயத்தில் கைத்தறித் துணியையும் ஆலைத் துணியையும் ஒரே மாதிரி பாவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டுள்ளதாகத் தெரிகிறது.

பின்தள்ளப்பட்ட வகுப்பினருக்கு

## வீட்டு வசதி

### இரண்டாம் திட்டத்தில் செய்ய சிபாரிசு

இந்தியாவிலுள்ள பிற்பட்ட வகுப்பினருக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் ரூ. 5 கோடிக்கு வீட்டு வசதித் திட்டம் ஒன்றினை மேற்கொள்ளுமாறு மத்திய சர்க்காருக்கு யோசனை கூறியிருப்பதாக, பிற்பட்ட வகுப்புக் கமிஷனர் எல். எம். ஸ்ரீகாந்த் தெரிவித்திருக்கிறார்.

"தீண்டாமை வரவர மறைந்துகொண்டே வருகிறது; தற்போது பிற்பட்ட வகுப்பினரை எதிர்நோக்கியிருக்கும் பிரச்சினையில் வீட்டுப் பிரச்சினைதான் முக்கியம்" என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

சமுதாய நலத் திட்டங்கள், சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள், தேசிய விரிவு படுத்தும் திட்டங்கள் ஆகியவற்றின் கீழ் 1954 செப்டம்பர் வரை ஆரம்பிக்கப்பட்ட புதிய கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 4,747. அதே காலத்தில், கூட்டுறவுச் சங்கங்களில் புதிதாகச் சேர்க்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை 1,84,254.



# 'மக்களின் முடிவுக்குக் கட்டுப்படுவேன்'

## 'தேர்தல் நடைபெறும் வரையில் எதிரிகள் பொறுத்திருக்கட்டும்'

அர்ஜெண்டைன தலைவர் பெரான் அறைகூவல்

பியூனஸ் அயர்ஸ், ஜூன் 19—
"அர்ஜெண்டைன மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிப்பவன் நான் என்ற நம்பிக்கை எனக்குண்டு;

தேர்தல்களை எவர் முன்னின்று நடத்தினாலும்—எல்லோருக்கும் பரிபூரண சுதந்திரத்துடன் அவை நடத்தப்பட்டால், அத்தகைய சுயேச்சையான தேர்தல்களின் முடிவுக்குக் கட்டுப்பட்டு நடக்க நான் தயார்;

"அர்ஜெண்டைன மக்கள் என்னை ஆதரிக்கத் தவறிவிடுகிறார்களாவென்று பார்த்துவிடலாம்.

"தேர்தல் வரையில் என் எதிரிகள் காத்திருக்கக் கூடாதா? ஒவ்வொருவரும் அவரவர் வாக்குகளைப் பதிவு செய்யட்டும்; அதன் பின் மக்களின் தீர்ப்புப்படி நாம் நடந்து கொள்வோம்,"

என்று, தலைவர் பெரான், ஒரு சொற்பொழிவில் குறிப்பிட்டிருக்கிறார்.

நடைபெற்ற சண்டையைப் பற்றி அவர் குறிப்பிடுகையில் சொன்னார்:—

"வழக்கம் போல அர்ஜெண்டைன மக்கள் மீது, அன்னியர்களும், விரோதிகளும் அடங்கிய சதிக் கூட்டம் ஏவிவிட்ட சண்டையே இது; கலக நாட்களில் தொழிலாளர்கள் நடந்துகொண்ட முறையை பாராட்டுவதற்காகவே நான் இங்கு நேரில் வந்தேன்."

என்று, கூறியபோது பெருத்த கையொலி எழுப்பப்பட்டது.

அர்ஜெண்டைன ராடிகல் கட்சித் தலைவரும், பல அங்கத்தினர்களும் கைது செய்யப்பட்டனராம்.

அந்தக் கட்சியினர், 'தங்கட்கும், கலகத்திற்கும் எவ்விதத் தொடர்புமில்லை' என அறிவித்திருக்கின்றனராம்.

கலகத் தலைவரில் ஒருவரென்று கருதப்படும் அட்மிரல் ஆலிவரும், மற்றொரு தலைவரான அட்மிரல் கால்டிராலும் கைது செய்யப்பட்டனர் என்றும் கூறப்படுகிறது.

மூன்றும் சதிகாரர் எனக் கூறப்படும், உப அட்மிரல் பெஞ்சமினோ கார்கிரோ என்பார் தற்கொலை செய்து கொண்டதாகக் கூறப்படுகிறது.

## முனிசிபல் தேர்தல்

### 'குறி' போட்டு வாக்களிக்கும் முறை கையாளப்படும்?

சென்னை, ஜூன் 18—
வருகிற செப்டம்பர் திங்களில் நடைபெற இருக்கும் முனிசிபல் தேர்தலிலும், அபேட்சகர்களின் சின்னத்திற்கு நேராக வாக்குச் சீட்டில் 'குறி' போட்டு வாக்களிக்கும் முறையே கையாளப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் முடிவு செய்துள்ளதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

சென்ற மாவட்டக் கழகத் தேர்தலின்போது இம்முறை கையாளப்பட்டது குறிப்பிடத் தக்கது.

பழைய முறைப்படி, ஒவ்வொரு அபேட்சகருக்குமென ஒவ்வொரு பெட்டி வைத்து, அதன்மீது அபேட்சகரின் சின்னம் பொறிக்கப்பட்டிருக்கும். வாக்காளர்கள் தாங்கள் விரும்பும் அபேட்சகர்களின் பெட்டியில் தங்கள் வாக்குச் சீட்டுகளைப் போடுவர். ஆனால் இப் புதிய முறைப்படி, ஒரே வாக்குச் சீட்டிலேயே போட்டியிடும் அபேட்சகர்கள் அனைவரின் சின்னமும் குறிக்கப்பட்டிருக்கும். எந்த அபேட்சகருக்கு வாக்குச்செய்ய வாக்காளர் விரும்புகிறாரோ அந்த அபேட்சகரின் சின்னத்திற்கு நேராக ஒரு அடையாளக் குறி செய்துவிட்டு வாக்குப் பெட்டியில் போட்டுவிடவேண்டும். எனவே இம்முறைப்படி ஒரே ஒரு பெட்டிதான் வாக்குச் சீட்டுகள் போட வைக்கப்பட்டிருக்கும்.

இந்தத் தேர்தல் முறையையே சென்னை நகரசபைத் தேர்தலிலும் பின்பற்றுவது பற்றி சர்க்கார் யோசித்து வருவதாகவும், இது பற்றி விரைவில் ஒரு முடிவு மேற்கொள்ளப்படும் எனவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

# கிராமங்களை இணைக்க 5000 மைல் நீளமுள்ள பாதைகள்

## ரூ.15 கோடி செலவில் சென்னை சர்க்கார் திட்டம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்வதற்காகச் சென்னை சர்க்கார், ரூ. 15 கோடி செலவில் போக்குவரத்துச் சாலைகள், இணைப்புச் சாலைகள் ஆகியவற்றிற்கான திட்டம் ஒன்றைத் தயாரித்துள்ளதாம்.

இப்போதுள்ள பெரியசாலைகளுடன், தொலை தூரங்களில் உள்ள கிராமங்களையும், குக்கிராமங்களையும் இணைக்கவே திட்டத்தின் நோக்கம் என்றும் கூறப்படுகிறது:

இத்திட்டப்படி, 500-க்கு மேற்பட்ட மக்கள் வாழும் 6,000 கிராமங்களுக்கும் பெரிய சாலைகளுக்கு மிடையில் புதியதாக இணைப்புச் சாலைகள் அமைக்கப்படுமென்றும், அந்தப் புதிய சாலைகளின் மொத்த தூரம் 5000 மைல் நீளமாக இருக்குமென்றும் தெரிகிறது. மேலும், 500-க்கும் குறைவாக மக்கள் வாழும் கிராமங்களிலிருந்து பெரிய சாலைகளுக்குப் போகும் சாலைகளை தேசிய வளர்ச்சித் திட்டத்தின் கீழும், சமுதாய நலத் திட்டத்தின் கீழும் போடுவார்களாம்.

இத்திட்டத்தின் கீழ் நடைபெற இருக்கும் மற்ற புதிய சாலைகள் வேலை விவரம் பின்வருமாறு:—

மாநிலத்திலுள்ள சாலைகளில் 120 கல் தொலைவிற்கு 'காங்கிரீட்' போடப்படும். 2,000 கல் தொலைவுக்கு சாலைகளில் 'தார்' மெழுகப்படும்; 1,400 மைல் தொலைவுக்கு கல் கப்பி போடுவது போன்ற அபிவிருத்தி வேலைகள் நடைபெறும். இவை தவிர, 100 பாலங்களும், வாராவதிகளும் கட்டப்படும்.

## இரயில்வே கட்டண விகிதத்தில் திருத்தம்

### ஆலோசனைக் குழு தலைவராக ஏ. இராமசாமி நியமனம்?

இரயில்வே கட்டண விகிதங்களை மாற்றி அமைப்பது பற்றி ஆலோசனை நடத்த இன்னும் சில தினங்களுக்குள்ளாக ஒரு ஆலோசனைக் குழு நியமிக்கப்படும் என்றும், இக்குழுவின் தலைவராகத் திரு. ஏ. இராமசாமி அவர்கள் இருப்பார் என்றும், குழுவில் உத்தியோகஸ்தர்களும், பாராளுமன்ற உறுப்பினர்களும் அங்கம் வகிக்கலாமெனவும் பத்திரிகைக் குறிப்பு ஒன்றின் மூலம் தெரிய வருகிறது.

## மாநில மாநாட்டு வரவேற்புக் குழுக் கட்டணம்

சென்னையில் நடைபெற்ற பொதுக் குழு முடிவின்படி, திருச்சியில் நடைபெறவிருக்கும் தி. மு. கழக 2-வது மாநில மாநாட்டு வரவேற்புக் குழு உறுப்பினர்கள் கட்டணம் ரூபாய் பத்தும் மே மாதம் 15-ந் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொண்டபடி, பல தோழர்களிடமிருந்தும் இன்று வரையில் வந்து சேரவில்லை. இரண்டு முறை அறிவிப்புக் கார்டுகளும் அனுப்பியாயிற்று. இனி, மூன்றாவது முறையாக அறிவிப்புக் கார்டுகள் அனுப்பி வைக்கும் அவசியமில்லாதபடி, வரவேற்புக் குழு உறுப்பினர் கட்டணம் ரூபாய் பத்தும், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் முகவரிக்கு M.O. மூலம் அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

இராயபுரம், சென்னை-13, 14—6—55 } —பொறுப்பாளர், தி. மு. கழகம், தலைமை நிலையம்

## திருமணங்கள்

10—6—55-ல், கோவையில், கோத்தகிரி தோழர் அ. வேந்தன்—தோழியர் இரா. லலிதா திருமணம், தோழர் வி. சண்முகநாதன் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் ச. அ. முத்துமணி, கா. அன்பன், சடகோபன் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினர். கோத்தகிரி தி. மு. கழகத்தின் சார்பிலும், வேறு பலரும் வாழ்த்திதழ்கள் வாசித்தளித்தனர். இதன் நினைவாகத் தோழர் கா. அன்பன் அவர்களால் 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 3 நன்கொடை வழங்கப்பட்டது—வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

12—6—55-ல் ராப்ராய் எஸ்டேட் தி. மு. கழகத் துணைச் செயலாளர் தோழர் வே. க. வீர பாண்டியன்—தோழியர் கே. வள்ளியம்மாள் திருமணம், தோழர் கோத்தகிரி-வே ஒளியோன் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் ஆர். தங்கவேல், க. கணபதி, பி. ஜி. துரையரசு ஆகியோர் மணமக்களை வாழ்த்தியும், சுயமரியாதைத் திருமணத்தின் அவசியம் குறித்தும் சொற்பொழிவாற்றினர். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது — வரப் பெற்றோம் — நன்றி—பொறுப்பாளர்.

* * *

2—6—55-ல், பெத்திக்குட்டையில் தோழர் ரெங்கன்—தோழியர் சுப்பம்மாள் திருமணம் நடைபெற்றது. கழகத் தோழர்கள் சார்பில் மணமக்களுக்கு வாழ்த்திதழ்களும், பரிசுகளும் வழங்கப்பட்டன, இதன் நினைவாக மணமகனால் 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 நன்கொடை அளிக்கப்பட்டது—வரப்பெற்றோம் — நன்றி — பொறுப்பாளர்.

* * *

12—6—55-ல், ஆத்தூர் வட்டம், அரசனத்தம் கிராமப் பஞ்சாயத்து உறுப்பினர் திரு. அங்கமுத்து அவர்களின் புதல்வன் தோழர் ஏ. தாண்டவன்—தோழியர் நல்லம்மாள் சீர்திருத்தத் திருமணம் தோழர் எம். பி. சுப்பிரமணியம் எம்.எல்.ஏ., தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் எம். ஆர். மாணிக்கம், ஏ. எஸ். ராமச்சந்திரன், எம். ஏ. கந்தசாமி, எஸ் ஏ. வி. வேலன் ஆகியோர் மணமக்களைப் பாராட்டிப் பேசினர். இதன் நினைவாக, மணமக்கள் சார்பில் 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 அன்பளிப்பாகத் தரப்பட்டது—வரப் பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

10—6—55 காலை 9 மணிக்கு, மேலவாழக்கரையில், ஒரே பந்தலில் நான்கு திருமணங்கள் ஒரே சமயத்தில், தோழர் கோ. வெங்கடாசலபதி தலைமையில் நடைபெற்றது. மணமக்கள்: செயச்சந்திரன்—சுசீலா; சுந்தரம்—சரஸ்வதி; கோபாலகிருஷ்ணன் — யசோதா; இராமசாமி—அம்மணி ஆகியோர் மணமக்களைப் பாராட்டி தோழர் என். எஸ் இளங்கோ பேசிய பின், தோழர் என். வி நடராசன் 'சீர்திருத்த திருமணம்' என்பது குறித்துச் சொற்பொழிவாற்றினார். மணமக்களுக்கு வாழ்த்து மடல்களும், பரிசுகளும் வழங்கப்பெற்றன. இத்திருமண நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 நன்கொடை வழங்கப்பட்டது—வரப் பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

12—6—55 காலை 8 மணியளவில் கடலூர் — புதுப்பாளையம் மெயின் ரோடு, எண் 2 இல்லத்தில் தோழர் எம். சுந்தரராசுலு தலைமையில், தோழர் ம. குப்புசாமி—தோழியர் மு. அம்புசம் திருமணம் நடைபெற்றது. மணமக்களைப் பாராட்டி தோழர்கள் என். வி. நடராசன், ச. தமிழரசன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். இத்திருமண நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது—வரப் பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

12—6—55 காலை 9 மணியளவில், தோழர் தில்லை-வில்லாளன் தலைமையில், அண்ணாமலைநகரில் தோழர் தெய்வசிகாமணி—தோழியர் அலமேலு அம்மையார் திருமணம் நடைபெற்றது. தோழர்கள் அறிவுடைநம்பி, திருமாரன் ஆகியோர் மணமக்களை வாழ்த்திச் சொற்பொழிவாற்றினர் அண்ணாமலைநகர் தி. மு. கழகத்திற்கு ரூ 2-ம், 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 1-ம் இத்திருமண நினைவாக, மணமகள் சார்பில் அன்பளிப்பு தரப்பட்டது—'நம் நாடு' அன்பளிப்பு ரூ. 1 வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

9—6—55-ல் சிதம்பரம் வட்டம் கூடுவெளிச்சாவடி கிராமத்தில், தோழர் க. சிவஞான சிகாமணி தலைமையில், தோழர் ஆ. செயராமன்—தோழியர் தனலெட்சுமி திருமணம் நடைபெற்றது தோழர்கள் தில்லை-வில்லாளன், பொ. சொக்கலிங்கம் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

* * *

2—6—55 அன்று, அலங்காநல்லூர்—புதுப்பட்டியில் பூ. கணேசன் தலைமையில், தோழர் மு. சந்தானத்திற்கும் — தோழியர் இராஜம்மாளுக்கும் திருமணம் நடைபெற்றது. அன்று மாலை தோழர் மணி தலைமையில், தோழர் எம்.எஸ். இராமசாமி மணமக்களைப் பாராட்டி சொற்பொழிவாற்றினர். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 தரப்பட்டது—வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

# செய்திச் சுருள்

## கம்பர்நத்தம் துவக்கப் பள்ளி ஆண்டு விழா

21—5—55ல், தஞ்சை மாவட்டக் கழகத்தைச் சேர்ந்த கம்பர்நத்தம் துவக்கப் பள்ளியின் ஆண்டு விழாவையொட்டி அன்று இரவு, தோழர் தேவநாதன் தலைமையில் பள்ளி மாணவர்களால் 'உழைப்பின் உயர்வு' என்ற நாடகமும், பள்ளி பழைய மாணவர்களால் தோழர் இரா. செழியன் தீட்டிய 'காணிக்கை' என்ற நாடகமும் நடைபெற்றது.

அதே தினத்தில் மேற்கண்ட நாடகங்களுக்குப் போட்டியாக, தமிழரசுக் கழகம், இளைஞர் காங்கிரஸ் ஆகியவற்றைச் சேர்ந்த சின்னையா ராசன் குழுவினரால் நடிக்கப்பட்ட 'யார் பெரியவர்' என்ற நாடகம் ஏற்ற முறையில் அமையாத காரணத்தால் பொது மக்களால் புறக்கணிக்கப்பட்டு பாதியிலேயே நிறுத்தப்பட்டது. (ந-நி)

## சென்னை-வண்ணை கே. எஸ். பாண்டியன் பகுத்தறிவுப் படிப்பகம்

12—6—55 இரவு 8 மணிக்கு மேற்படி படிப்பகத்தில் தோழர் எஸ். எஸ். இ. மாயில் தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், மே மாத வரவு-செலவு கணக்குகள் சரிபார்க்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டது.

## தேனி நெடுஞ்செழியன் மன்றம்

8-6-55-ல், பயிற்சி கழகத்தின் மூலம் சோ.வெற்றி அரசு தலைமையில், சொற்போர் நடைபெற்றது. முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பழ. இராசப்பனுக்கு கைத்தறி வேட்டி ஒன்றும், மற்ற இருவருக்கு துண்டும், பனியனுமாக பரிசு அளிக்கப்பட்டது. பின்னர், தோழர்கள் பலர் உரையாற்றினர்.

## குடியேற்றம் மக்கள் மறுமலர்ச்சி மன்றம்

12—6—55 மாலை 7 மணியளவில், தோழர் மணி இல்லத்தில் நடைபெற்ற மன்ற நிர்வாகக் குழுக் கூட்டத்தில் விரைவில் சந்தைப் பேட்டையில் மன்றத் திறப்பு விழா நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டது. மேற்படி மன்றம் நகர தி. மு. கழகத்தின் கிளையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது குறித்து மகிழ்ச்சி தெரிவித்துக்கொள்ளப்பட்டது.

## கடையநல்லூர் கருணாநிதி கலா மன்றம்

15—6—55 இரவு 8-30 மணியளவில், நகர தி. மு. க. பணிமனையில், தோழர் எஸ். எஸ். சாகுல்கமீது தலைமையில் நடைபெற்ற மன்றப் பொது உறுப்பினர் கூட்டத்தில் 1955—56 ஆண்டுக்கான மன்ற நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். செயலாளர்கள்: பி. சாகுல்கமீது, எம். ஏ. சுப்பையா, பொருளாளர்: டி. வெலிங்கம்; நாடகக் குழு டைரக்டர்: கே. எஸ். எம் காசிம்; நிர்வாகக் குழு உறுப்பினர்கள் 7 பேர். இறுதியில் அண்ணா அவர்களுக்கு நன்றியும், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்குப் பாராட்டும் தெரிவித்துக் கொள்ளப்பட்டது.

## 'சமூகப் புயல்' நாடகம்

11—6—55ல் அரசனத்தம் கிராமத்தில் தோழர் இ. என். சிங்கம் தலைமையில் தி. மு. கழகத் தோழர்களால் 'சமூகப் புயல்' நாடகம் நடத்திக் காண்பிக்கப்பட்டது. தோழர்கள் எம். ஆர். மாணிக்கம், ஏ. எஸ். ராமச்சந்திரன் ஆகியோர் 'சீர்திருத்த நாடகம்' என்பது பற்றிப் பேசினர்.

## தூத்துக்குடி துரைசாமி ஞாபகார்த்த 'வாலி பால்' பந்தயப் போட்டி

12—6—55ல் நடைபெற்ற மேற்படி வாலிபால்மாவட்ட பந்தய போட்டியின் இறுதி ஆட்டம் தூத்துக்குடி வாலிபால் கிளப்பிற்கும், சாயர்புரம் வெல்டன் கிளப்பிற்கும் நடைபெற்றது. இதில் மூன்று ஆட்டங்களில் தூத்துக்குடி வாலி பால் கிளப், தொடர்ந்து வெற்றி பெற்று வெள்ளிக் கோப்பைகள் பரிசாகப் பெற்றுள்ளது. (ஏ.-நி.)

## மறைவு

12—6—55 இரவு 9 மணிக்கு, காங்கேயநல்லூர் தி. மு. கழகச் செயலாளர் தோழர் டி. ஆர். பாலகிருஷ்ணனின் தாயார் தோழியர் பூங்காவனம் அம்மையார் இயற்கை யெய்தியமைக்குக் கழகச் சார்பில் அனுதாபம் தெரிவித்துக் [illegible]

# சிந்து சட்ட சபை: வெடி குண்டுகளால் தகர்க்க சதி?

## எதிர்க் கட்சியினர் மீது குற்றச்சாட்டு?

சபைத் தலைவர் வெளியிடும் தகவல்

கராச்சி, ஜூன் 20—

பாகிஸ்தான் ஐதராபாத்தில் உள்ள சிந்து மாநில சட்டசபை மண்டபத்தை வெடி வைத்துத் தாக்கித் தகர்த்தெறிய சட்டசபை உறுப்பினர்கள் சிலர் சதித் திட்டம் தீட்டியதாக சபைத் தலைவர் தகவல் தந்திருக்கிறார்.

தமக்கு நேற்று மாலையே போலீசார் மூலம் தகவல் கிடைத்ததாகவும், அதனை ஒட்டி தகுந்த முன்னேற்பாடுகள் செய்யப்பட்டதின் விளைவாக அந்த சதித் திட்டம் நிறைவேருமல் செய்யப்பட்டதாகவும் அவர் கூறியிருக்கிறார்.

மாலையில், இந்த சதியை ஒட்டி சிலர் கைது செய்யப்படலாமெனவும் அவர் கூறினர்.

சட்டசபைக் கட்டிடத்திற்குள் சில வெடிகுண்டுகள் இருந்ததாகப் போலீசார் தெரிவித்தனர்.

"இந்தச் சதிக்கு எதிர்க் கட்சியினரே பொறுப்பு," என்று, சர்க்கார் தரப்பில் கூறப்பட்டதாம்.

### சட்டசபை உறுப்பினர் வெளியேற்றப்பட்டார்

சிந்து மாநில சட்டசபைக் கூட்டம் ஆரம்பமாவதற்குச் சற்று நேரத்திற்கு முன்னர் ஆகாகுலாம் கைபி பத்தான் என்ற சட்டசபை உறுப்பினர் ஒருவர், முதலமைச்சரின் உத்தரவின் பேரில் போலீசாரால் சபையினின்றும் அப்புறப் படுத்தப்பட்டாராம்.

சிந்து சட்டசபை எதிர்க் கட்சியின் புதுத் தலைவராக சிறுமால் கிரிபால் தாஸ் என்பவர் சபைத் தலைவரால் அங்கீகரிக்கப்பட்டுள்ளார் எனத் தெரிய வருகிறது.

# தீண்டாமை ஒழிப்புச் சட்ட சுவரொட்டிகள்.....

## மதுரை தி. மு. க.-வினர் செய்த விளம்பரத்தை அகற்றிய போலீசாரின் போக்கு!

மதுரை, ஜூன் 17—

சென்னை சர்க்காரின் தாழ்த்தப்பட்டோர் நல பாதுகாப்பு இலாகாவினர் வெளியிட்ட தீண்டாமை விலக்கு விளம்பரச் சுவரொட்டிகளை தி. மு. கழகத்தின் மதுரைக் கிளையினர் நகரின் பல இடங்களிலும், பொதுமக்கள் பார்வையில் தென்படும்படியாக தட்டிகளில் ஒட்டி வைத்திருந்தனர்.

இந்த தட்டிகளை, போலீசார், பொதுமக்களுக்குத் தொந்தரவாக இருப்பதாகக் கூறி அப்புறப்படுத்தியிருக்கின்றனர்.

போலீசாரின் இந்தப் போக்கு, அதிகாரப் பற்றற்றது என்றும், ஜனாயக விரோதமானது என்றும் மதுரை நகர் தி. மு. கழகச் செயலாளர் ஒரு அறிக்கையில் கூறியிருக்கிறார்.

மதுரை மாவட்ட அதிகாரிக்கு பத்திரிகையாளர்கள், இதனை கவனத்திற்குக் கொண்டுவந்தபோது. அது பற்றித் தாம் கவனிப்பதாகவும், அந்தச் சுவரொட்டிகளை அப்புறப்படுத்துமாறு தாம் உத்திரவு எதும் பிறப்பிக்கவில்லை என்றும் தெரிவித்திருக்கிறார்.

மேற்கண்ட தீண்டாமை ஒழிப்பு சட்ட விளம்பரத் தாள்களை பொது இடங்களில் தி. மு கழகத்தினர் அலங்கரித்து விளம்பரம் செய்திருப்பதை எதிர்த்து, மதுரை பார்ப்பன இளைஞர் சங்கத்தவர் தம்மிடம் தாக்கல் செய்துள்ள மனுவிற்கும், போலீசார் அவற்றை அப்புறப்படுத்தியிருப்பதற்கும் எவ்வித தொடர்புமில்லை என்றும் மாவட்ட அதிகாரி கூறியிருக்கிறார் எனத் தெரிகிறது.

—'நவ இந்தியா'

## அகில உலக......

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

னது; இந்தி தேசிய மொழியாக்கப்பட்டதற்குக் காரணம், 'இந்தி வளமுடையது—ஆற்றல் மிக்கது,' என்பதால் அல்ல; ஆனால், அது இந்தியாவில் பெரும்பாலானோரால் பேசப் படுவதாயிருப்பதால்தான், தேசிய மொழியாக்கப்பட்டது!

"தமிழர்கள், இந்தி தேசிய மொழியானால் தாங்கள் போற்றி வளர்க்கும் தாய்மொழி—தமிழின் வளர்ச்சி பாதிக்கப்படும் என்று அஞ்சுகிறார்கள்; இந்தப் பிரச்சினை, திறந்த மனதுடன் விவாதிக்கப்பட்டு தீர்க்கப்பட வேண்டும்:

"இந்தியை தாய்மொழியாகக் கொண்ட மக்கள், இந்தியல்லாத வேறு ஒரு மொழியை—குறிப்பாக தென்னிந்திய மொழிகளில் ஒன்றைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

"தமிழர், வங்காளிகள், மலையாளிகள் எல்லோரும், தங்கள் தாய்மொழி மட்டுமின்றி, வேறு ஒரு இந்தி மொழி கற்றுக்கொள்ளுவதில் ஆர்வமுடையவராயிருக்கின்றனர்; ஆனால், இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டோருக்கு அந்த ஆர்வம் இல்லை; இது மிக வருந்தத்தக்கதாகும்;

"வேறு பல மொழியினர்—தங்கள் மொழி, இலக்கியம், கலை வளர பாடுபடுகின்றனர்; இந்தி மொழி பேசுவோருக்கு அந்தத் துறையில் கவனமே இல்லை; ஆனால் 'இந்தியை வளர்க்க அரசாங்கம் உதவவில்லை,' என்று மட்டும் குறைபட்டுக்கொள்கின்றனர்," என்றார்.

## தஞ்சை மாவட்டத்தில்!

### இரு சர்க்கரை ஆலைகள்?

தஞ்சாவூர் மாவட்டத்தில் மற்றும் இரண்டு சர்க்கரை ஆலைகளுக்கு லைசென்ஸ் வழங்க இந்திய சர்க்கார் அனுமதி வழங்கியிருக்கிறதாம்.

இந்த இரண்டு ஆலைகளில் ஒன்று பாபநாசம் தாலுகாவிலும், மற்றொன்று மன்னார்குடி தாலுகாவிலும் நிறுவப்படுமாம்.

பாபநாசம் தாலுகாவில் ஏ.-கிருஷ்ணசாமி என்பவரும், மன்னார்குடி தாலுகாவில் குன்னியூராரும் (சாம்பசிவ அய்யா) முககிய 'ஆர்கனைசர்'கள் என்று கூறப்படுகிறது.

## தகராறு தீர்ந்தது!

புதுடில்லி, ஜூன் 19—

'இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன்' நிர்வாகிகளுக்கும்—சிப்பந்திகளுக்குமிடையே இருந்து வந்த தகராறு 'பைசல்' செய்யப்பட்டுவிட்டதாகத் தெரியவருகிறது.

சிப்பந்திகளின் வசதிக்காக மேலும் ரூ. 18 லட்சம் அதிகமாகச் செலவிட நிர்வாகம் ஒப்புக்கொண்டுள்ளதாம்.

ஏற்கனவே ரூ. 35 லட்சம் இதற்கென செலவிட அறிவித்திருப்பது நினைவிருக்கலாம்.

## கழகக் கூட்டம்

★

மாயூரம்
நகரப் பூங்காவில்
23 6—55 மாலை 6 மணிக்கு
தலைவர்: கே. கே. நீலமேகம்
பேசுவோர்:
சி. என். அண்ணதுரை
அ. பொன்னம்பலனூர்
என். எஸ். இளங்கோ

குறிப்பு:—பொதுக்கூட்டத்தில் தோழர் சி என். அண்ணதுரை அவர்களிடம் மாநில மாநாட்டுக்கு நிதி அளிக்கப்படும்.

## வடாற்காடு மாவட்ட தி. மு. கழகக் கிளைத் தோழர்கட்கு

★

"26-6-55 மாலை 6 மணிக்கு, வேலூர் கோட்டை மைதானத்தில், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்படும். அவ்விழாவில் கிளைக் கழகத் தோழர்களெல்லாரும் கலந்துகொண்டு விழாவினை சிறப்பிக்க வேண்டுகிறேன்,"

என்று, வ. ஆ மாவட்டச் செயலாளர் தோழர் முல்லை-சத்தி அறிவிக்கிறார்.

### புதிய கட்டிடத் திறப்பு விழா

23—6—55 மாலை 6 மணிக்கு. சென்னை-வண்ணையிலுள்ள தென் பகுதி இரயில்வே தொழிலாளர் யூனியனின் ஒபன்லைன் கிளை நிலைபத் திறப்பு விழா நடைபெறும். திரு. தி. வ. ஆனந்தம் கொடி ஏற்றிவைப்பார். சென்னை முதலமைச்சர் காமராசர் கட்டிடத்தைத் திறந்துவைப்பார். இந்திய இரயில்வே உதவி அமைச்சர் ஓ. வி. அளகேசன் காந்தியாரின் உருவச் சிலையையும், எஸ். குருசாமி திரு. வி. க. நூல் நிலையத்தையும், எம். ஆதிகேசவலு 'ஸ்ரீ சம்மந்தம் மண்டபத்'தையும் திறந்துவைப்பர்.

### சொற்பயிற்சிக் கூட்டம்

22—6—55 மாலை 6 மணிக்கு, சென்னை 5-வது வட்ட தி.மு.கழக இல்லில், தோழர் இரா. சண்முகம் தலைமையில்'பகுத்தறிவும்-பழைமையும்' என்னும் பொருள் குறித்து சொற் பயிற்சிக் கூட்டம் நடைபெறும்.

## அண்ணதுரை

சுற்றுப்பயணம்

★

22—6—55: மாலை 6 மணிக்கு: முத்துப்பேட்டை: மாநில மாநாட்டு நிதியளிப்பு-பொதுக் கூட்டம்.

23—6—55: காலை: வேளூர் திருமண நிகழ்ச்சி;
மாலை 6 மணிக்கு: மாயவரம்: மாநில மாநாட்டு நிதியளிப்பு-பொதுக்கூட்டம்

இந்நிகழ்ச்சிகளில் அண்ணா அவர்களுடன் தோழர் அ. பொன்னம்பலனூர், தோழர் கே. ஏ. மதியழகன் ஆகியவர்களும் கலந்து கொள்வார். தஞ்சை மாவட்ட தி. மு கழகச் செயலாளர் தோழர் என். எஸ். இளங்கோ அவர்களும் தஞ்சை மாவட்ட சுற்றுப்பயண நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வார்.

### கி. மனோகரன், எஸ். முத்து சுற்றுப்பயணம்

★

ஜூன் 22: அல்லிநகரம் (தேனி)
23: மேலூர்
25: போடி
26: பெரியகுளம்
27: பழைய ஆயக்குடி (பழனி வட்டம்)

# தொழிலாளர் மீது தடியடி, கண்ணீர்ப்புகை பிரயோகம்

## பெண்களும் தாக்கப்பட்டனராம்!

ஜெய்ப்பூர், ஜூன் 20—

மீவார் துணி ஆலைத் தொழிலாளர் மீது போலீசார் கண்ணீர்ப் புகைப் பிரயோகம் செய்தும், 56 ஆண்—64 பெண் தொழிலாளர்களைக் கைது செய்தும் உள்ளனராம்.

அந்த ஆலைக்கு வேலைக்குப் போகக் கூடாதென்று மற்ற தொழிலாளர்களை சில தொழிலாளர்கள் தடுத்து நிறுத்த முயற்சித்து தடையுத்தரவை மீறியதினாலேயே மேற்படி சம்பவம் நிகழ்ந்ததென அறிவிக்கப் பட்டுள்ளது.

கைது செய்யப்பட்டவர்களில் எல்லாப் பெண்களும் 4 ஆண்களும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதின் பேரில் விடுதலை செய்யப்பட்டனராம்.

# ரூ. 400 கோடி செலவில்...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

காது. இதை வலியுறுத்தும் வகையில்தான் சென்ற மாதத்தில் சென்னைக்கு வந்திருந்த நிதி அமைச்சர் தேஷ்முக் சூசகமாகக் கூறியுள்ளார்

இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில், மாநில அரசாங்கங்களும், மத்திய அரசாங்கமும், மேலும் வரி விதிப்பதற்குரிய வாய்ப்புகள் இருக்கின்றன என்ற வரி விசாரணைக் குழுவின் கருத்தைத் தாம் ஆதரிப்பதாக நிதி அமைச்சர் குறிப்பிட்டுள்ளார். அதுவுமன்றி, அபிவிருத்தி ஏற்பாடுகள் புதிய வரி விதிப்பின் மூலம் மேற்கொள்ளப்பட வேண்டுமென்றும், கடன் தொகைகளை முதலீட்டுக்குப் பயன்படுத்த வேண்டுமென்றும் அவர் அறிவித்துள்ளார்.

சென்னை அரசாங்க நிதி அமைச்சர் சுப்பிரமணியமோ, வரி விதிக்கும் உயர்ந்த வரம்பை சென்னை நெருங்கிவிட்டதாகவும், மத்திய அரசாங்கம் கொடுக்க இணங்கும் உதவியையும், கடனையும் பெற்றுத்தான் தனது இரண்டாது ஐந்தாண்டு திட்ட ஏற்பாடுகளை மேற்கொள்ள வேண்டிய நிலையில் சென்னை இருந்து வருவதாகவும் வெளிப்படையாகவே அறிவித்துள்ளார்.

அத்துடன், 'வரி விசாரணைக் குழுவின் சிபாரிசு, சென்னை நீங்கலாக மற்ற மாநிலங்களுக்குப் பொருந்தக்கூடியதாக இருக்கக் கூடும்,' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மற்ற மாநிலங்களில் மேற்கொள்ளப்பட்டிராத நிலையில், சென்னையில் அத்தியாவசியப் பொருள்கள் மீது கூட விற்பனை வரி வசூலிக்கப்பட்டு வருகிறது. மோட்டார் வரி உச்சத்தை அடைந்துவிட்டிருக்கிறது இத்தகைய நிலையில், புதிய வரி விதிப்பின் மூலம், தனது திட்ட ஏற்பாடுகளை சென்னையால் நிறைவேற்ற இயலுமென எதிர்பார்ப்பது வீணேயாகும்.

தொழில் துறையில் சென்னை பின் தங்கிக் கிடக்கிறது என்ற உண்மையைக் கருத்தில் கொண்டும், முதல் ஐந்தாண்டு திட்டக் காலத்தில், அதற்குரிய பங்கை சென்னை, டெல்லி அதிகாரிகளிடமிருந்து பெறத் தவறிவிட்டிருக்கிறது என்பதை எண்ணியும், தாராளமாகப் பண உதவி செய்ய முன் வர வேண்டியது மத்திய அரசாங்கத்தின் கடமையாகும்.

தொலைவில் உள்ள தெற்கை தொடர்ந்து அலட்சியப்படுத்தி வருகிறார்கள் என டெல்லி அதிகாரிகள் குற்றஞ் சாட்டப்படாமல் இருக்க வேண்டுமானல், இரண்டாவது திட்டத்தில் பெரிய அளவில் ஈடு செய்தாக வேண்டும்.

நீண்டகாலமாக ஒதுக்கப்பட்டு வந்திருக்கும் தெற்கு, தொழில துறையில் முன்னேறுவது என்பது, தனது உதவியையே பெரிதும் நம்பிக் கிடக்கும் அதன் திட்ட ஏற்பாடுகளை நிறைவேற்றுவதில், இந்தியப் பேரரசு உதவி செய்ய முன்வரும் நல்லெண்ணத்தின் அளவைப் பொறுத்தே இருக்கிறது.

## திருச்சியில்......

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

செழியன் அவர்கட்கும், அண்ணா அவர்கட்கும் திருச்சி மாவட்ட தி. மு. கழகம், நகர தி. மு. கழகம் ஆகியவை சார்பில், வாழ்த்திதழ்கள் வாசித்தளிக்கப்பட்ட பின்னர், திருவானைக்காவல், மண்பறை, கல்லுக்குழி, மதுரைரோடு, தாப்பாய், மணப்பாறை, வையம்பட்டி, சிங்களாந்தபுரம், கவுண்டம்பட்டி, பெரியகடைவீதி, ரீரம்பூர், தாராநல்லூர், மேலக்கற்கண்டார் கோட்டை, பண்ணுங்கொம்பு, ஜீயபுரம், செங்காட்டுப்பட்டி, திருச்சி 20-வது வட்டம், குளித்தலை, பொன்மலைப்பட்டி, எடத்தெரு, துறையூர் ஆகிய தி மு. கழகக் கிளைகள் சார்பிலும், உறையூர் நெசவுத் தொழிலாளர்கள், கைத்தறி நூல்—பசைத் தொழிலாளர்கள், மதுரை ரோடு பீடி, சுருட்டுத் தொழிற் சங்கம், மறுமலர்ச்சி மன்றம், பாண்டியன் படிப்பகம், திருச்சி அச்சுத் தொழிலாளர்கள், பாலக்கரை பித்தளைப் பாத்திரக் கடை வியாபாரிகள் ஆகிய சங்கங்கள், தனிப்பட்டோர் சார்பிலும் கைத்தறித் துண்டுகளும், மலர் மாலைகளும் அணிவிக்கப்பட்டன.

பின், பொதுச் செயலாளர் அவர்கள் முன்னிலையில், அண்ணா அவர்களிடம் மாநில மாநாட்டிற்கு ரூ. 1,600 நிதி அளிக்கப்பட்டது.

பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்து பேசியதும், அண்ணா அவர்கள் இன்றைய நிலை குறித்து சொற்பொழிவாற்றினர்.

## 3-ம் படிவம் வரை பயிலும் ஏழை மாணவருக்கு

### பள்ளிக் கட்டண விதிவிலக்கு!

சென்னை, ஜூன் 20—

எல்லா ஆரம்பப் பள்ளிகளிலும், 3-ம் படிவம் முடியவுள்ள நடுநிலைப் பள்ளிகளிலும் படிக்கும் எல்லா ஏழை மாணவர்களுக்கும் இந்த 1955—56-ம் கல்வி ஆண்டிலிருந்து, பள்ளிக்கட்டணம் செலுத்துவதினின்றும் விதி விலக்கு அளிக்க வேண்டுமென்று சர்க்கார் பிறப்பித்துள்ள உத்தரவு எல்லா பள்ளி நிர்வாகங்களுக்கும் கிடைத்துள்ளதாம்.

இவ்வுத்தரவுப்படி, ஒரு மாணவன் ஒரே வகுப்பில் இரு தடவை தவறினால் இச்சலுகையை இழந்துவிடுவான் என்பதும், உயர்தர வகுப்பிற்குத் தேறினால் மீண்டும் இச்சலுகை தொடர்ந்து தரப்படும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது அறிந்ததே.

1954-55-ம் ஆண்டில், இந்தியாவில் மொத்தம் சுமார் 35½ லட்சம் டன் கம்பு உற்பத்தியாயிற்று.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

